● **11 - 15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப்** பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒரு** சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடனொன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியைத் தெரிந்து, அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

11. (1) ஹோமர் - இதிகாசங்கள்
(2) சோக்கிரட்டீஸ் - உயிரியல் விஞ்ஞானம்
(3) அரிஸ்டோற்றில் - அளவையியல்
(4) பைதகோரஸ் - கணிதவியல்
(5) ஹிப்போகிறட்டீஸ் - மருத்துவம் (......)

12. (1) இலியட் - ஒடிஸி
(2) ஹெறொடோற்றஸ் - தியூசிடிடீஸ்
(3) றொமியுலஸ் - ரேமஸ்
(4) லிபி - தசிட்டஸ்
(5) ரோமர் - மிலேச்சர் (......)

13. (1) புரோட்டகோரஸ் - எல்லாவற்றுக்கும் மனிதனே அளவுகோலாகும்.
(2) பிளேட்டோ - தத்துவஞானிகளே அரசராதல் வேண்டும்.
(3) அரிஸ்டோற்றில் - மனிதன் அரசியல் விலங்காவான்.
(4) ஹொப்ஸ் - அரசன் நரியையும் சிங்கத்தையும் போல நடிக்க வேண்டும்.
(5) ரூஸோ - மனிதன் சுதந்திரமாகப் பிறந்தவன்; அவன் எங்கும் விலங்கிடப்பட்டுள்ளான். (......)

14. (1) ஜோக் - வெனிஸ்
(2) ஸ்போரேஸா - மிலான்
(3) மெடிஸி - ஃபுளோரன்ஸ்
(4) எஸ்தே - ஃபெராரா
(5) கொன்ஸாகா - மந்துவா (......)

15. (1) போர்த்துக்கேயர் - கோவா
(2) ஸ்பானியர் - மணிலா
(3) ஒல்லாந்தர் - பற்றேவியா
(4) ஆங்கிலேயர் - கல்கத்தா
(5) பிரான்சியர் - மக்காவோ (......)

● **16 - 25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள்/ கூற்றுகள் / திகதிகள் என்பவற்றின் தொகுதிகள் X, Y என்னும் நிரல்களிலே தரப்பட்டுள்ளன. Y நிரலிலே தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் X நிரலிலே தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையிலே தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கிலே தரப்படவில்லை. Y நிரலில் உள்ளவற்றை X நிரலிற்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள **ஐந்து** சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். **சரியான** சேர்மானத்தைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

16.

| X | Y |
|---|---|
| (i) செயாஸ் | A காதற் தெய்வம் |
| (ii) அதீனா | B மதுபானத் தெய்வம் |
| (iii) அஃப்றொடைற் | C கடற் தெய்வம் |
| (iv) போசிடொன் | D வானத்துத் தெய்வம் |
| (v) டயனீஸஸ் | E ஞானம், போர் என்பவற்றின் தெய்வம் |

(1) D C E A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

17.

| X | Y |
|---|---|
| (i) ரைபர் நதி | A ஆங்கிலக் கால்வாய் |
| (ii) டனியூப் நதி | B வடகடல் |
| (iii) ஸைன் நதி | C மத்தியதரைக் கடல் |
| (iv) எல்ப் நதி | D போல்ரிக் கடல் |
| (v) விஸ்த்ரூலா நதி | E கருங்கடல் |

(1) D C E A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

[பக். 3 ஐப் பார்க்க

18. X — Y

(i) அரிஸ்ரோற்றில் — A இத்தாலிய வரலாறு (History of Italy)
(ii) மக்கியாவெலி — B அரசியல் (Politics)
(iii) குயுஸியாடினி — C சட்டங்களின் இயல்பு (Spirit of the laws)
(iv) மொன்ரெஸ்கியூ — D தேசங்களின் செல்வம் (Wealth of Nations)
(v) அடம் ஸ்மித் — E அரசன் (The Prince)

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

19. X — Y

(i) பொற்றிசலி — A இறுதித் தீர்ப்பு
(ii) லியனாடோ டாவின்சி — B ஐந்தாம் சார்ள்ஸ் சக்கரவர்த்தி
(iii) மைக்கேல் ஆஞ்சலோ — C அதென்ஸ் கல்லூரி (School of Athens)
(iv) றஃபேல் — D வீனஸின் உற்பத்தி
(v) ரிற்றியன் — E மொனாலிஸா

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

20. X — Y

(i) ஹப்ஸ்பேர்க் — A பிரெஸ்யா
(ii) ரியூடர் — B நெதர்லாந்து
(iii) பூர்பன் — C இங்கிலாந்து
(iv) ஹொஹென் ஸோலேர்ன் — D ஒஸ்திரியா
(v) ஒரேன்ஞ் — E பிரான்ஸ்

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

21 X — Y

(i) முப்பதாண்டு போர் — A பாரிஸ் ஒப்பந்தம்
(ii) நெப்போலியனின் போர்கள் — B வேர்ஸை உடன்படிக்கை
(iii) கிருமியப் போர் — C பூர்ட்ஸ்மத் உடன்படிக்கை
(iv) ரஷ்ய ஜப்பானியப் போர் — D வெஸ்ர்ட் ஃபேலியா உடன்படிக்கை
(v) முதலாம் உலகப் போர் — E வியன்னா மாநாடு

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

22. X — Y

(i) ஒஸ்திரியா — A ஹொல்ஸ்ரைன்
(ii) பீட்மன்ட் — B லொறேயின்
(iii) சவோய் — C சார்டீனியா
(iv) ஸிலெஷ்வெக் — D ஹங்கேரி
(v) அல்சேஸ் — E நீஸ்

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

23. X — Y

(i) நெப்போலியன் பொனபாட் — A 'புதிய பொருளாதாரக் கொள்கை'
(ii) ஒற்றோ வொன் பிஸ்மார்க் — B 'பெரெஸ்ரொய்க்கா கொள்கை அல்லது பொருளாதார மறுசீரமைப்பு'
(iii) V. I. லெனின் — C 'மார்ஷல் திட்டம்'
(iv) ஜோர்ஜ் மார்ஷல் — D இரத்தமும் இரும்பும் என்ற கொள்கை
(v) மிகைல் கோர்ப்பசோர்வ் — E கண்டத்துப் பொருளாதார முறை

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

24. X — Y

(i) 'இளைய' இத்தாலி — A ரொட்ஸ்கி
(ii) செஞ்சட்டஇனர் — B மஸினி
(iii) செம்படை — C முஸோலினி
(iv) கருஞ்சட்ட இனர் — D ஹிட்லர்
(v) மண்ணிறச் சட்டஇனர் — E ஹரிபோல்ட்

(1) DCEAB (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

[பக். 4 ஐப் பார்க்க

3570

25.	X	Y

| X | | Y |
|---|---|---|
| (i) சர்வதேச தொழிலாளர் சங்கம் (ILO) | A | நியூயோர்க் |
| (ii) சர்வதேச நீதிமன்றம் (ICJ) | B | பாரிஸ் |
| (iii) சர்வதேச சிறுவர் நிதியம் (UNICEF) | C | ஜெனீவா |
| (iv) சர்வதேசக் கல்வி, விஞ்ஞான பண்பாட்டு நிறுவனம் (UNESCO) | D | ரோம் |
| (v) உலக உணவுத் திட்டம் (WFP) | E | ஹேக் |

(1) D C E A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

- **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவு செய்து

(A) யும் (B) யும் மட்டும் சரியாயின் ........... 1 எனவும்
(B) யும் (C) யும் மட்டும் சரியாயின் ........... 2 எனவும்
(C) யும் (D) யும் மட்டும் சரியாயின் ........... 3 எனவும்
(A) யும் (C) யும் மட்டும் சரியாயின் ........... 4 எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரியாயின் ........... 5 எனவும் **புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| (A) யும் (B) யும் மட்டும் சரி | (B) யும் (C) யும் மட்டும் சரி | (C) யும் (D) யும் மட்டும் சரி | (A) யும் (C) யும் மட்டும் சரி | **ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரி |

26. **மேல்வருவோருள் கிரேக்க நாடக ஆசிரியர்கள் யாவர் ?**
(A) ஐஸிலஸ் (Aeschylus)
(B) பின்டார்
(C) சோஃபோக்ளிஸ்
(D) டிமோக்கிரிடர்ஸ் (......)

27. **மேல்வருவனவற்றுள் எவை மத்திய ஐரோப்பாவின் மிகப் புராதனமான பல்கலைக்கழகங்கள்**
(A) ஒஸ்லோ பல்கலைக்கழகம்
(B) லிவர்பூல் பல்கலைக்கழகம்
(C) பொலோஞ்சா பல்கலைக்கழகம்
(D) பாரிஸ் பல்கலைக்கழகம் (......)

28. **மேல்வருவனவற்றுள் மானிய முறையின் இயல்புகள் யாவை ?**
(A) பலமான மத்திய அரசாங்கம்
(B) பிரபுக்கள் வர்க்கம்
(C) அடிமைகள் வர்க்கம்
(D) பலம் கொண்ட நிலையான படை (......)

29. **போர்த்துக்கேயர் மேற்கொண்ட நாடுகாண் பயணங்கள் தொடர்பாக மேல்வருவனவற்றுள் எது / எவை சரியானது / சரியானவை ?**
(A) ஆசியாவை அடைவதற்கு ஒரு புதிய வழியைக் கண்டுபிடிப்பதே பிரதானமான நோக்கமாகும்.
(B) ஆரம்ப காலத்து நாடுகாண் பயணங்கள் 'கப்பலோட்டி' ஹென்றியின் ஆதரவுடன் நடைபெற்றன.
(C) பிரெஸ்ரட் ஜோர்ன் என்பவரோடு போர்த்துக்கேயராலே தொடர்பு கொள்ள முடிந்தது.
(D) வாஸ்கோடகாமா 1478 இல் கோவாவிற்கு வந்தான். (......)

30. **மேல்வருவோருள் எவர்கள் பிரித்தானியாவிலே பிரதம மந்திரிகளாக இருந்தனர் ?**
(A) காஸல்ரே
(B) கனின்
(C) டிஸ்ரைலி
(D) கிளாட்ஸ்ர்ரன் (......)

[பக். 5 ஐப் பார்க்க

● **31 - 35** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் **ஒன்று** உரிய தலைப்புடன் **பொருந்தாது. அதனைத்** தெரிவு செய்து அதன் **இலக்கத்தை புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

31. **முப்பதாண்டுப் போர்**
   (1) பிரதானமாக ஜேர்மனியை மையமாகக் கொண்டு 1618 இலே போர் ஆரம்பமாகியது.
   (2) அது கத்தோலிக்கருக்கும் எதிர்தரப்பு சீர்திருத்தவாதிகளுக்கும் இடையில் நடைபெற்றது.
   (3) இந்தப் போரிலே பிரான்ஸ் கத்தோலிக்கர்களுக்கு உதவி புரிந்தது.
   (4) சீர்திருத்தவாதிகளின் வெற்றியோடு போர் முடிந்தது.
   (5) ஐரோப்பாவிலே சமயப் போர் முப்பதாண்டுப் போருடன் முடிவுற்றன. (......)

32. **கைத்தொழிற் புரட்சி**
   (1) கைத்தொழிற் புரட்சி என்பது கிராமிய, விவசாயப் பொருளாதாரம் நகரங்களை மையமாகக் கொண்ட இயந்திர சாதனங்கள் மூலமான உற்பத்தி முறைக்கு மாற்றம் அடைந்தமையைக் குறிக்கும்.
   (2) கைத்தொழிற் புரட்சி இங்கிலாந்தில் ஆரம்பமாகியது.
   (3) பின்பு அது பிற ஐரோப்பிய தேசங்களுக்குப் பரவியது.
   (4) கைத்தொழிற் புரட்சியினால் பலன்களைப் பெற்ற முதலாவது ஐரோப்பிய நாடு போர்த்துக்கல் ஆகும்.
   (5) கைத்தொழிற் புரட்சி உற்பத்தியை அதிகரித்தது. (......)

33. **பிரெஞ்சுப் புரட்சி**
   (1) ரென்னிஸ் மைதான சத்தியப் பிரமாணம் பிரெஞ்சுப் புரட்சியின் தொடக்கத்தைக் குறித்தது.
   (2) 1789 இல் யூலை 14 ஆம் திகதி பஸ்ரீல் கோட்டை உடைக்கப்பட்டது.
   (3) அரசியலமைப்பு விதிகளுக்குக் கட்டுப்பட்ட அரசனாக 17 ஆம் லூயி முடிசூட்டப் பெற்றான்.
   (4) தேசிய சபை மனித உரிமைகள் பிரகடனத்தை வெளியிட்டது.
   (5) புரட்சியினால் முதலாளித்துவ வர்க்கமே கூடிய பலனைப் பெற்றது. (......)

34. **ஜேர்மனி இணைக்கப்பட்டமை**
   (1) பிரெஸ்யாவின் தலைமையில் சோல்வரைன் அமைக்கப்பட்டது.
   (2) 1862 இல் பிஸ்மார்க் பிரெஸ்யாவின் சான்ஸலர் ஆனார்.
   (3) ஏழு வாரப் போரில் ஒஸ்ரியா தோற்கடிக்கப்பட்டது, பிரெஸ்யாவின் கட்டுப்பாட்டில் 1866 ஆம் ஆண்டு வட ஜேர்மன் ஒன்றியம் அமைக்கப்பட்டது.
   (4) பிரான்ஸுக்கும் பிரெஸ்யாவிற்குமிடையிலான போரின் விளைவாக ஜேர்மனியின் இணைப்பு முழுமையாக நிறைவேறியது.
   (5) 1871 இல் விக்ரர் இமானுவெல் ஜேர்மனியின் கயிஸர் ஆனார். (......)

35. **இத்தாலியில் பாஸிஸம்**
   (1) வைமார் குடியரசின் பலவீனம் இத்தாலியிலே பாஸிஸம் எழுச்சி பெறுவதற்கு வழியமைத்தது.
   (2) இத்தாலியில் பாஸிஸத்தின் தலைவராக பெனித்தோ முஸோலினி விளங்கினார்.
   (3) அவர் 1922 இல் இத்தாலியின் அதிகாரத்தைக் கைப்பற்றினார்.
   (4) அவர் உரோமன் கத்தோலிக்க திருச்சபையோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார்.
   (5) பாஸிஸமயமாகி விட்ட இத்தாலி 1935 ஆம் ஆண்டில் எதியோப்பியா மீது படையெடுத்தது. (......)

[பக். 6 ஐப் பார்க்க

- **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து, **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**அட்டவணை**

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1.** | சரியானது | பிழையானது |
| **2.** | சரியானது | சரியானது |
| **3.** | பிழையானது | பிழையானது |
| **4.** | பிழையானது | சரியானது |
| **5.** | சரியானது | சரியானதும், **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|
| 36. கிரேக்கர் ஒரு பொதுவான மொழி பண்பாடு ஆகியவற்றைக் கொண்டிருந்த பொழுதிலும் அவர்கள் அரசியல் அடிப்படையில் பிரிந்திருந்தனர். | ஒவ்வொரு நகராட்சியினையும் பேணிக் கொள்வதில் கிரேக்கர்கள் உறுதி கொண்டிருந்ததால் பெருமளவான பகுதிகளைக் கொண்ட அரசியல் இணைப்பை ஏற்படுத்திக் கொள்ள முடியவில்லை. | (......) |
| 37. மகா அலெக்ஸாந்தர் உரோமாபுரியில் ஒரு களியாட்ட அரங்கமாகக் கொலோஸியத்தைக் கட்டினான். | உரோமர்கள் அழித்துச் சென்ற அருஞ் செல்வங்களில் அவர்களின் சட்ட முறையே முதன்மையானது. | (......) |
| 38. இரத்த ஓட்டத்தைப் பரசெல்சஸ் கண்டுபிடித்தான். | மாண்புமிகு புரட்சிக் காலத்தில் இங்கிலாந்து மன்னர் முதலாம் சார்ள்ஸினைக் கழுவேற்றினர். | (......) |
| 39. ஒவ்வொரு அரசனும் தனது நாட்டிற்குரியது லூதரின் சமயமோ அல்லது கத்தோலிக்கமோ என்பதைத் தீர்மானிக்கும் உரிமையை ஒகஸ்ட்பேக் சமாதான உடன்படிக்கை வழங்கியது. | கத்தோலிக்க திருச்சபையை சீர்திருத்தும் பொருட்டு றென்ட் மகா சபையைக் காட்டி கத்தோலிக்க திருச்சபையை சீர்திருத்துவதற்கு ஒகஸ்ட்பேர்க் சமாதான உடன்படிக்கை வழியமைத்தது. | (......) |
| 40. வட அத்திலாண்டிக் உடன்படிக்கை நிறுவனம் (NATO) 1949 இல் அமைக்கப்பட்டது. | பேர்லின் சுவர் உடைக்கப்பட்ட பின்பு கிழக்கு ஜேர்மனியும் மேற்கு ஜேர்மனியும் மீண்டும் இணைக்கப்பட்டன. | (......) |

※ ※

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-B T II

ஐரோப்பிய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி 1989 வரை

அறிவுறுத்தல்கள்:
※ **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு **ஐரோப்பாவின் புறவுருவப் படம்** வழங்கப்படும்).

## பகுதி II

1. உமக்குத் தரப்பட்ட படத்தில் மேல்வருவன எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு, அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றி வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.
   - (i) அதென்ஸ் (ii) மத்திய தரைக்கடல் (iii) சிசிலி
   - (iv) டனியுப் நதி (v) ஜெனோவா (vi) போர்த்துக்கல்
   - (vii) லிவர்பூல் (viii) பேர்லின்

   *(சரியாகக் குறித்துப் பெயரிட்ட ஒவ்வொன்றுக்கும் **01** புள்ளி ; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளிகள்)*

2. (i) கிரேக்க நகரங்களில் நிலைபெற்ற ஆட்சி முறைகளைப் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(07 புள்ளிகள்)*
   (ii) உரோமாபுரியினுடைய அரசியலமைப்பு வளர்ச்சியின் பிரதான கட்டங்களை எடுத்துக்காட்டுக. *(07 புள்ளிகள்)*

3. (i) இத்தாலியில் மறுமலர்ச்சி தொடங்குவதற்கு ஏதுவாயிருந்த காரணங்களைப் பரிசீலனை செய்க. *(06 புள்ளிகள்)*
   (ii) மறுமலர்ச்சியின் பிரதானமான சாதனைகளை ஆராய்க. *(08 புள்ளிகள்)*

4. "திருச்சபைக்கு எதிரான சீர்திருத்த இயக்கத்தை ஒரு சமயப் புரட்சி என்று கொள்வது கூடுதலான பொருத்தமுடையதாகும்".
   (i) திருச்சபைக்கு எதிரான சீர்திருத்த இயக்கம் எந்த நாட்டில் ஆரம்பமாகியது ? *(01 புள்ளி)*
   (ii) அந்தச் சீர்திருத்த இயக்கத்திற்குத் தலைமைதாங்கிய **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   (iii) அந்தச் சீர்திருத்த இயக்கத்திற்கு ஏதுவான சமய, அரசியல், பொருளாதார காரணங்களைப் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(04 புள்ளிகள்)*
   (iv) திருச்சபைக்கு எதிரான சீர்திருத்த இயக்கத்தின் விளைவுகள் தொடர்பாக மேற்குறித்த கூற்றினை ஆராய்க. *(07 புள்ளிகள்)*

5. "அமெரிக்க சுதந்திரப் போர் அமெரிக்காவில் மட்டுமன்றி ஐரோப்பாவிலும் பெருமளவிலான பாதிப்பை ஏற்படுத்தியது".
   (i) அமெரிக்க சுதந்திரப் போருக்குத் தலைமை தாங்கியவரின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   (ii) அமெரிக்க சுதந்திரப் போரில் இடம்பெற்ற பிரதானமான சுலோகம் யாது ? *(01 புள்ளி)*
   (iii) வட அமெரிக்காவிலுள்ள **நான்கு** பிரித்தானிய குடியேற்ற பிரதேசங்களின் பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   (iv) அமெரிக்க சுதந்திரப் போர் ஏற்படுவதற்கு அடிப்படையாகவிருந்த பொருளாதார, அரசியற் காரணங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. *(04 புள்ளிகள்)*
   (v) அமெரிக்க சுதந்திரப் போரின் விளைவுகளின் அடிப்படையில் மேற்குறித்த கூற்றினைப் பரிசீலனை செய்க. *(06 புள்ளிகள்)*

6. "பிரெஞ்சுப் புரட்சியின் நோக்கங்களையும் குறிக்கோள்களையும் நெப்போலியன் போனபாட் தொடர்ந்து முன்னெடுத்துச் சென்றான்".
   (i) நெப்போலியன் போனபாட் எங்கு பிறந்தான் ? *(01 புள்ளி)*
   (ii) அவன் தனது இராணுவக் கல்வியை எங்கு பெற்றான் ? *(01 புள்ளி)*
   (iii) அவன் ஃபிரான்சின் சக்கரவர்த்தியாகும் வரை அவனது வாழ்க்கை வரலாற்றைப் பற்றிச் சுருக்கமாக விளக்குக. *(04 புள்ளிகள்)*
   (iv) மேற்குறித்த குறிப்பினை நெப்போலியன் போனபாட்டின் உள்நாட்டுக் கொள்கைகள் தொடர்பாக நுணுக்கமாக பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

[பக். 8 ஐப் பார்க்க

7. இத்தாலியினை இணைப்பதற்கான இயக்கத்தின் பிரதான கட்டங்களை விளக்கி, இத்தாலியை இணைப்பதில் மஸ்ஸினி, கவூர், கரிபோல்டின் ஆகியோர் கொண்டிருந்த பங்கினை மதிப்பிடுக. (14 புள்ளிகள்)

8. மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமான குறிப்புகள் எழுதுக.

   (i) உரோமப் பேரரசிலே கிறிஸ்தவம் பரவியமை
   (ii) மானிய முறை
   (iii) வெஸ்ட் ஃபேலியா சமாதானம்
   (iv) வியன்னா மகாநாடு
   (v) பனிப்போர்

   (ஒரு குறிப்புக்கு 07 புள்ளிகள்)

9. பகுதி (அ) விற்கு **அல்லது** (ஆ) விற்கு **மட்டும்** விடை எழுதுக.

(அ) "உலகிலே ஒரு நிலைபேறான சமாதானத்தை ஏற்படுத்துவதில் சர்வதேச சங்கம் தோல்வி அடைந்தது".

   (i) சர்வதேச சங்கத்தை அமைப்பதற்கு அடிப்படையாக இருந்த உடன்படிக்கையின் பெயரைக் குறிப்பிடுக. (01 புள்ளி)

   (ii) சர்வதேச சங்கத்தின் சபையில் நிரந்தர உறுப்புரிமை பெற்ற நாடுகள் **இரண்டின்** பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

   (iii) சர்வதேச சங்கத்தின் பிரதானமான குறிக்கோள்கள் யாவை ? (03 புள்ளிகள்)

   (iv) இரண்டாம் உலகப் போர் ஏற்படுவதை சர்வதேச சங்கத்தினால் தடுப்பதற்கு இயலாமையினைப் பற்றிக் குறிப்பாகக் கருத்திற் கொண்டு மேற்குறித்த கூற்றினை ஆராய்க. (08 புள்ளிகள்)

**அல்லது**

(ஆ) இரண்டாம் உலகப் போரின் விளைவுகளை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

* * *

3570 AL/2013/25-B-E-II



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II
வரலாறு II
History II

25-B T

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. 01

විභාග අංකය / சுட்டெண் / Index No. ..........................................



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

**25-C T II**

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

சுட்டெண்: ........................

**நவீன உலக வரலாறு - கி.பி 1500 – 1989**

**அறிவுறுத்தல்கள்:**

* இவ்வினாத்தாளில் **40** வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்தில்** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினா தொடர்பாகவும் **ஐவைந்து** விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது.
* ஒரு வினாவுக்கு உரிய சரியான விடையைத் தெரிவு செய்த பின் அதனை இப்பத்திரத்திலே **அறிவுறுத்தல்களுக்கமையக் குறிப்பிடுக. இவ்வினாப்பத்திரத்திற்கு 40 புள்ளிகள் வழங்கப்படும்.**
* உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது பகுதி I இற்கான விடைகளை எழுதிய பின்னர், பகுதி II இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.** இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலமாகும்.**

## பகுதி I

● **1 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

1. (1) அப்பலாச்சியன் (2) அந்தீஸ் (3) பிரனீஸ்
(4) அல்ப்ஸ் (5) போலான் (......)

2. (1) நாலந்தா (2) பொலோன்யா (3) பாதுவா
(4) ஒக்ஸ்போட் (5) கேம்பிரிடஜ் (......)

3. (1) கியோதோ (2) டோக்கியோ (3) பீஜிங்
(4) ஒஸாகா (5) ஹிரோஷிமா (......)

4. (1) கொப்பர்னிக்கஸ் (2) ரிற்றியன் (3) கலிலியோ
(4) பரசெல்ஸஸ் (5) வில்லியம் ஹார்வி (......)

5. (1) வில்லியம் சேக்ஸ்பியர் (2) ஜோன் மில்டன் (3) வில்லியம் வேர்ட்ஸ்வத்
(4) ஜோன் ஸ்ருவட்மில் (5) சார்ள்ஸ் டிக்கின்ஸ் (......)

6. (1) வெனிசூலா (2) ஆர்ஜென்டீனா (3) கொலம்பியா
(4) நமீபியா (5) பொலிவியா (......)

7. (1) சுரேந்திரநாத் பனேர்ஜி (2) B. G. திலக் (3) G. K. கோகலே
(4) சுபாஸ் சந்திரபோஸ் (5) சீக் முஜிபு ரகுமான் (......)

8. (1) V. I. லெனின் (2) மென்சிபிக் (3) ஜோசப் ஸ்டாலின்
(4) குரூஷோஃப் (5) கோர்பசோஃப் (......)

9. (1) கிளெமென்ட் அட்லி (2) ஹரிரூமன் (3) ஜோன் கென்னடி
(4) ரிச்சர்ட் நிக்ஸன் (5) ஜெரால்ட் ஃபோல்ட் (......)

10. (1) டாட் ஹமர்ஸ்யோல்ட் (2) சார்ள்ஸ் டிகோல்ட் (3) யூதான்ட்
(4) கேர்ட் வல்ட்ஹைன் (5) கோஃபி அனான் (......)

[பக். 2 ஐப் பார்க்க

● **11 - 15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப்** பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒரு** சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடனொன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியைத் தெரிந்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

11. (1) நேபாளம் - காத்மண்டு
(2) நோர்வே - ஒஸ்லோ
(3) பிலிப்பைன் - மணிலா
(4) இந்தோனேசியா - பாங்கொக்
(5) ஈரான் - டெஹ்ரான் (......)

12. (1) மொஹாலயர் - இந்தியா
(2) தொகுகாவா - ஜப்பான்
(3) லோடி - வியட்நாம்
(4) மஞ்சு - சீனா
(5) சக்ரீ - சீயம் (தாய்லாந்து) (......)

13. (1) கோவா - போர்த்துக்கேயர்
(2) பற்றேவியா - ஒல்லாந்து
(3) சைகோன் - ஸ்பானியர்
(4) கல்கத்தா - ஆங்கிலேயர்
(5) பாண்டிச்சேரி - பிரான்சியர் (......)

14. (1) தோமஸ் ஹொப்ஸ் - வர்த்தகவாதம் (Mercantilism)
(2) அடம்ஸ்மித் - தலையிடாக் கோட்பாடு
(3) எட்மண்ட் பேர்க் - பழமைவாதம்
(4) ஜெரமி பெந்தம் - பயனுடைவாதம்
(5) முசோலினி - ஃபாசிஸம் (......)

15. (1) கோல் கோஸ்ட் - கானா
(2) தங்கனைக்கா - தன்சேனியா
(3) அபிசீனியா - எதியோப்பியா
(4) ரோடீஸியா - சிம்பாவே
(5) மொறோக்கோ - சோமாலியா (......)

● **16 - 25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள்/ கூற்றுகள் / திகதிகள் என்பவற்றின் தொகுதிகள் X, Y என்னும் நிரல்களிலே தரப்பட்டுள்ளன. Y நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் X நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையிலே தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கிலே தரப்படவில்லை. Y நிரலில் உள்ளவற்றை X நிரலிற்கேற்பச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள **ஐந்து** சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். **சரியான** சேர்மானத்தைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

16.

| X | Y |
|---|---|
| (i) குவாங்கோ | A தென் அமெரிக்கா |
| (ii) மிசிசிப்பி | B பிரான்ஸ் |
| (iii) அமேசன் | C சீனா |
| (iv) சேன் | D மியன்மார் |
| (v) இரவடி | E வட அமெரிக்கா |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

17.

| X | Y |
|---|---|
| (i) ஜிபிரோல்டர் நீரிணை | A செங்கடலும் மத்தியதரைக் கடலும் |
| (ii) டாட்னெல்ஸ் நீரிணை | B அத்திலாந்திக் சமுத்திரமும் மத்தியதரைக் கடலும் |
| (iii) சுயஸ்கால்வாய் | C அத்திலாந்திக் சமுத்திரமும் பசுபிக் சமுத்திரமும் |
| (iv) பனாமா கால்வாய் | D போல்டிக் கடலும் வடகடலும் |
| (v) கீல் கால்வாய் | E ஏஜியின் கடலும் மர்மாரா கடலும் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

[பக். 3 ஐப் பார்க்க

18.

| X | Y |
|---|---|
| (i) அமெரிக்காக் கண்டம் | A அரைத்தூக்கத்தில் உறங்கும் அனல் கக்கும் பெரும்பூதம் |
| (ii) ஆபிரிக்காக் கண்டம் | B ஐரோப்பாவின் நோயாளி |
| (iii) சீனா | C (பிரித்தானியா) அரசரின் மகுடத்து மரகதமணி |
| (iv) இந்தியா | D புதிய உலகம் |
| (v) துருக்கி | E இருண்டகண்டம் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

19.

| X | Y |
|---|---|
| (i) ஸ்ரேலிங் பவுண் | A சீனா |
| (ii) பிராங் | B ஜப்பான் |
| (iii) யுவான் | C ஐக்கிய இராச்சியம் |
| (iv) யென் | D ஜேர்மனி |
| (v) டொயிஸ் மார்க் | E பிரான்ஸ் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

20.

| X | Y |
|---|---|
| (i) சைமன் பொலிபார் | A பர்மா |
| (ii) யோஸ் ரிசால்ட் | B மலேசியா |
| (iii) சுகர்னோ | C இந்தோனேசியா |
| (iv) ஔன்சான் | D வெனிசூலா |
| (v) துங்கு அப்துல் ராமன் | E பிலிப்பைன்ஸ் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

21

| X | Y |
|---|---|
| (i) ஏழாண்டுப் போர் | A இங்கிலாந்தும் சீனாவும் |
| (ii) ஜேனாப் போர் | B ஒஸ்ரியாவும் பிரெஸ்யாவும் |
| (iii) அபின்போர் | C சார்டீனியாவும் ஒஸ்ரியாவும் |
| (iv) சொல்பெரினோ போர் | D பிரான்சும் பிரெஸ்யாவும் |
| (v) ஏழுவாரப் போர் | E இங்கிலாந்தும் பிரான்சும் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

22.

| X | Y |
|---|---|
| (i) பிறேசில் | A தகலோக் |
| (ii) ஈரான் | B போர்த்துக்கேயம் |
| (iii) பிலிப்பைன்ஸ் | C உருது |
| (iv) பாகிஸ்தான் | D எபிரேயம் |
| (v) இஸ்ரேல் | E பார்சி |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

23.

| X | Y |
|---|---|
| (i) ஜோசப் ஸ்டாலின் | A பிரித்தானியா |
| (ii) ஹிரோஹிதோ | B பிரான்ஸ் |
| (iii) பிராங்கிளின் ரூஸ்வெல்ட் | C ஐக்கிய அமெரிக்கா |
| (iv) வின்ஸ்டன் சேர்ச்சில் | D சோவியத் யூனியன் |
| (v) சார்ள்ஸ் டீகோல்ட் | E ஜப்பான் |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

24.

| X | Y |
|---|---|
| (i) மொசாம்பிக் | A பிரித்தானியாவினது |
| (ii) அல்ஜீரியா | B இத்தாலியினது |
| (iii) நைஜீரியா | C பெல்ஜியத்திற்குரியது |
| (iv) கொங்கோ | D போர்த்துக்கேயரது |
| (v) லிபியா | E பிரான்ஸினது |

(1) DECAB (2) CEABD (3) DEACB (4) BEACD (5) EDACB (......)

[பக். 4 ஐப் பார்க்க

25.

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | சர்வதேச தொழிலாளர் சங்கம் (ILO) | A | உரோமாபுரி |
| (ii) | சர்வதேச நாணய நிதியம் (IMF) | B | மணிலா |
| (iii) | ஐக்கிய நாடுகள் உணவு விவசாய நிறுவனம் (FAO) | C | நியூயோர்க் |
| (iv) | ஐக்கிய நாடுகள் அபிவிருத்தித் திட்டம் (UNDP) | D | வாஷிங்டன் |
| (v) | ஆசிய அபிவிருத்தி வங்கி (ADB) | E | ஜெனீவா |

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

- **26 - 30** ஆகிய வினாக்கள் ஒவ்வொன்றிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் **ஒன்று** உரிய தலைப்புடன் **பொருந்தாது. அதனைத்** தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

26. **"போரும் சமாதானமும் (War and Peace)" என்னும் பிரசித்தமான நாவலை எழுதியவர் யார் ?**

(1) அலெக்ஸாண்டர் புஸ்கின் (2) ஃபியோடோர் டொஸ்தோகேவ்ஸ்கி
(3) லியோ தோஸ்ரோய் (4) அன்ரன் செகோவ்
(5) மக்ஸிம் கோர்க் (......)

27. **ஐக்கிய அமெரிக்காவில் பொருளாதார நெருக்கடியிலிருந்து நாட்டைக் காப்பதற்கு "புதிய திட்டம் (New Deal)" என்னும் கொள்கையைத் தொடக்கி வைத்த ஜனாதிபதி யார் ?**

(1) வுட்ரோ வில்சன் (2) வொரன் ஹார்டிங்
(3) கல்வின் கூலிஜ் (4) ஹேபர்ட் ஹுவர்
(5) ஃபிராங்ளின் ரூஸ்வெல்ட் (......)

28. **மெசபொத்தேனியா தற்போது எப்பெயரால் வழங்குகின்றது ?**

(1) ஈராக் (2) ஈரான்
(3) துருக்கி (4) சிரியா
(5) சவுதி அரேபியா (......)

29. **இந்தியாவின் முதலாவது பிரதமர் யார் ?**

(1) வல்லபாய் பட்டேல் (2) ராஜேந்திர பிரசாத்
(3) சர்வவல்லி ராதாகிருஷ்ணன் (4) ஜவஹர்லால் நேரு
(5) ஜயப்பிரகாஷ் நாராயணன் (......)

30. **அஸ்வான் அணைக்கட்டை அமைத்த எகிப்திய ஜனாதிபதியின் பெயரைக் குறிப்பிடுக.**

(1) முகம்மது நஜீப் (2) கமால் அப்துல் நாஸர்
(3) மெனாசெம் பெகின் (4) அன்வர் சாதாத்
(5) முஸ்தாபா கமால் (......)

[பக். 5 ஐப் பார்க்க

- **31 - 35** ஆகிய வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவு செய்து

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் ........... **1** எனவும்
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ........... **2** எனவும்
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் ........... **3** எனவும்
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ........... **4** எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரியாயின் ........... **5** எனவும் **புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரி |

31. **1688 - 89ஆம் ஆண்டு மாண்புமிகு புரட்சி தொடர்பான மேல்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது சரியானவை ?**
   (A) றொபர்ட் வோல்பூல் மாண்புமிகு புரட்சிக்குத் தலைமை தாங்கினார்.
   (B) "சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்" என்பது அதன் பிரதான சுலோகமாகும்.
   (C) இங்கிலாந்து அரசரைப் பாராளுமன்றம் வெற்றி கொண்டமையினை அது குறித்தது.
   (D) அது இங்கிலாந்திலே ஒரு நிலைபேறான வரம்புடை முடியாட்சிக்கு அத்திபாரம் இட்டது. (......)

32. **முதலாம் உலகப் போர் குறித்து மேல்வரும் குறிப்பு / குறிப்புகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?**
   (A) பகைமை கொண்ட இரண்டு அணிகளாக ஐரோப்பா பிரிந்திருந்தமை முதலாம் உலகப் போருக்கான ஒரு பிரதானமான காரணமாகும்.
   (B) ஒஸ்திரிய இளவரசரான பிரான்சிஸ் பேர்டினன்ட் சராஜிவோவிலே படுகொலை செய்யப்பட்டமை முதலாம் உலகப் போருக்கான உடனடிக் காரணமாகும்.
   (C) ஜேர்மனி ஐக்கிய அமெரிக்காவிடமிருந்து இராணுவ உதவி பெற்றது.
   (D) ஜேர்மனி போரின் முடிவில் தோல்வி அடைந்தது. (......)

33. **பொல்ஷெவிக் புரட்சி தொடர்பாக மேல்வரும் கூற்று / கூற்றுகளில் எது/ எவை சரியானது/சரியானவை ?**
   (A) பஸ்ரீல் கோட்டையைத் தகர்த்தமையோடு பொல்ஷெவிக் புரட்சி ஆரம்பமாகியது.
   (B) "சமாதானம், நிலம், உணவு" என்பதே அதன் பிரதானமான சுலோகமாகும்.
   (C) லெனின், ட்ரொட்ஸ்கி ஆகிய இருவருமே புரட்சியின் முதன்மையான தலைவர்கள்.
   (D) ரஷ்யாவில் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு பொல்ஷெவிக் இயக்கத்தினருக்கு கெரன்ஸ்கி ஆதரவு புரிந்தார். (......)

34. **சீனாவில் ஏற்பட்ட கொம்யூனிசப் புரட்சி தொடர்பாக மேல்வரும் கூற்றுகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?**
   (A) சீனாவில் ஏற்பட்ட கம்யூனிசப் புரட்சியின் தனித்துவத் தலைவராக மார்சேதுங் விளங்கினார்.
   (B) சீன மக்கள் குடியரசு 1949 ஒக்ரோபர் முதலாம் திகதி அமைக்கப்பட்டது.
   (C) புரட்சியின் பின் உடனடியாக சியன்காய்ஷெக் ஐக்கிய அமெரிக்காவிற்கு ஓடினார்.
   (D) "புதிய பொருளாதார கொள்கை" என்னும் திட்டம் சீனாவின் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதற்கென்று ஆரம்பிக்கப்பட்டது. (......)

35. **"பனிப்போர் (Cold War)" தொடர்பான மேல்வரும் கூற்றுகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?**
   (A) பனிப்போரினை அரசியல் கொள்கை அடிப்படையிலும் பொருளாதார காரணங்களினாலும் ஐக்கிய அமெரிக்ககாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் இடையில் நிலவிய பிரகடனப்படுத்தப்படாத போர் என்று விபரிக்கலாம்.
   (B) அது 1929ஆம் ஆண்டு பொருளாதார வீழ்ச்சியோடு தொடங்கியது.
   (C) சோவியத் யூனியனின் வீழ்ச்சியோடு அது முடிவுற்றது.
   (D) பிரெஞ் ஜனாதிபதி பிரான்ஸ்வா மித்தரோன் பனிப்போரை முடிவுக்குக் கொண்டு வருவதில் ஒரு முக்கிய பங்கு வகித்தார்.

(......)

[பக். 6 ஐப் பார்க்க

- **36 - 40** ஆகிய வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையிற் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**அட்டவணை**

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1.** | சரியானது | பிழையானது |
| **2.** | சரியானது | சரியானது |
| **3.** | பிழையானது | பிழையானது |
| **4.** | பிழையானது | சரியானது |
| **5.** | சரியானது | சரியானதும், **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|
| 36. "மறுமலர்ச்சி" என்பது மறுபிறப்பென்று பொருள்படும். புராதன கிரேக்கத்திலும் உரோமாபுரியிலும் கல்வியிலும் பண்பாட்டிலும் ஏற்பட்ட மறுமலர்ச்சியை அது குறிக்கும். | இத்தாலியிலே தொடங்கிய மறுமலர்ச்சி பின்பு பிற ஐரோப்பிய நாடுகளுக்குப் பரவியது. | (……) |
| 37. அல்போன்ஸோ அல்பக்கர் கிழக்கில் ஏற்பட்ட ஒல்லாந்தரின் காலனித்துவ சாம்பிராச்சியத்தில் ஏற்பட்ட ஸ்தாபகராவார். | 1898 இல் கிழக்கிந்திய தீவுகளில் ஸ்பானியரின் ஆட்சி முடிவடைந்தது. அத்தோடு அமெரிக்காவினுடைய ஆட்சி ஆரம்பமாகியது. | (……) |
| 38. 1600 ஆம் ஆண்டில் ஸ்தாபிக்கப்பட்ட ஆங்கில, கிழக்கிந்திய கம்பனியினால் வட அமெரிக்க ஆங்கில குடியேற்றங்கள் உருவாக்கப்பட்டன. | ஒல்லாந்தர் ஐக்கிய கிழக்கிந்திய கம்பனி 1602 இல் அமைக்கப்பட்டது. | (……) |
| 39. தாய்லாந்திலே காலனித்துவம் ஏற்படுவதைத் தடுத்தமையில் மோங்க்குட், சூல லோகோர்ன் ஆகியோரின் கொள்கைகள் கணிசமான இடத்தைப் பெறுகின்றன. | மோங்கிட், சூலலோங்கோரன் ஆகிய இருவரும் இராஜதந்திரத்தின் மூலமாக, பிரித்தானியாவினதும் பிரான்சினதும் அச்சுறுத்தல்களிலிருந்து தாய்லாந்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கு மட்டுமன்றி அந்நாட்டில் கணிசமானளவு நவீனமயமாக்கத்தை ஏற்படுத்தவும் காரணமாயிருந்தனர். | (……) |
| 40. வட அத்திலாந்திக் உடன்படிக்கை (NATO) 1949 இல் ஸ்தாபிக்கப்பட்டது. | பேர்லின் சுவர் உடைக்கப்பட்டதும் கிழக்கு ஜேர்மனியும் மேற்கு ஜேர்மனியும் மீண்டும் இணைக்கப்பட்டன. | (……) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-C T II

**நவீன உலக வரலாறு - கி.பி 1500 – 1989**

அறிவுறுத்தல்கள்:
* **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு **உலகப் புறவுருவப் படம்** வழங்கப்படும்).

## பகுதி II

1. உமக்குத் தரப்பட்டுள்ள படத்தில் மேல்வருவன **எல்லா இடங்களையும் குறித்து, பெயரிட்டு** அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றி வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) மிசிசிப்பி
(ii) தைவான்
(iii) செங்கடல்
(iv) மடகஸ்கார்
(v) கேப் நகரம் (Cape Town)
(vi) போர்த்துக்கல்
(vii) பாக்கு நீரிணை
(viii) பிறேசில்

*(சரியாகக் குறித்துப் பெயரிடுவதற்கு 01 புள்ளி ; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் 05 புள்ளிகள்)*

2. "ஐரோப்பாவிலே 15ஆம், 16ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட நாடுகாண் பிரயாணங்கள் உலகின் பல பாகங்களிலே பெரும் மாற்றங்களை ஏற்படுத்தின".

(i) 15ஆம், 16ஆம் நூற்றாண்டுகளில் நாடுகாண் பயணங்களில் ஈடுபட்ட ஐரோப்பிய நாடுகளில் **ஒன்றின்** பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

(ii) நாடுகாண் பயணங்களுக்கு ஆதரவு புரிந்த மன்னர் **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

(iii) நாடுகாண் பயணங்களின் பிரதானமான குறிக்கோள்கள் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(03 புள்ளிகள்)*

(iv) 15ஆம், 16ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட ஐரோப்பாவின் கடல் ஆதிக்கத்தினைச் சிறப்பாகக் கொண்டு மேலே குறித்த கூற்றினைப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

3. "கத்தோலிக்க எதிர்ப்புச் சீர்திருத்தமானது மேற்கு ஐரோப்பாவிலே நிலவிய சமய ஒற்றுமையை அழித்தது".

(i) கத்தோலிக்க எதிர்ப்பு சமய சீர்திருத்தம் ஆரம்பமாகிய நாட்டின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

(ii) கத்தோலிக்க எதிர்ப்பு சமய சீர்திருத்தத்திற்கு தலைமை தாங்கிய **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

(iii) அந்தச் சீர்திருத்தத்திற்கு வழிவகுத்த காரணங்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக. *(03 புள்ளிகள்)*

(iv) கத்தோலிக்க எதிர்ப்பு சீர்திருத்த இயக்கத்தின் விளைவுகள் தொடர்பாக மேற்குறித்த கூற்றினை ஆராய்க. *(08 புள்ளிகள்)*

4. (i) அமெரிக்கப் புரட்சி ஏற்படுவதற்கு ஏதுவான பிரதானமான காரணங்களைப் பரிசீலனை செய்க. *(09 புள்ளிகள்)*

(ii) அமெரிக்கப் புரட்சியின் முக்கியத்துவத்தை ஆராய்க. *(05 புள்ளிகள்)*

[பக். 8 ஐப் பார்க்க

5. "ஜப்பானிய வரலாற்றில் மைஜீ காலம் ஆனது பெரும் மாற்றங்கள் ஏற்பட்ட காலமாகும்".

   (i) மைஜீ காலத்திற்கு முந்திய காலத்தின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

   (ii) மைஜீ காலத்தில் இராணுவத்திலும் நிர்வாகத்திலும் உச்சமான பதவியைப் பெற்றிருந்தவர் யார் ? *(01 புள்ளி)*

   (iii) 1853 இல் ஜப்பானை அடைந்த அமெரிக்க கடற்படை அதிகாரியின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

   (iv) 'மைஜீ புனருத்தாபனம் (Meiji Restoration)' எதனைக் குறிப்பிடுகின்றது என்பதைப் பற்றிச் சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(03 புள்ளிகள்)*

   (v) மைஜீ காலத்தில் ஜப்பானிய சமுதாயத்து அம்சங்கள் எல்லாவற்றையும் அடிப்படையாகக் கொண்டு முன்னே குறித்த கூற்றினை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

6. (i) இந்திய தேசிய காங்கிரஸ், அதன் ஆரம்ப காலத்திலே கொண்டிருந்த பிரதானமான குறிக்கோள்களைப் பற்றி ஒரு சுருக்கமான விளக்கவுரை எழுதுக. *(04 புள்ளிகள்)*

   (ii) இந்திய தேசிய இயக்கத்தில் காந்தியின் தலைமையில் இந்திய தேசிய காங்கிரஸ் ஆற்றிய பணிகளை மதிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

7. "இரண்டாம் உலகப் போரின் தொடக்கங்களை முதலாம் உலகப் போரிலேயே அடையாளம் காணலாம்".

   (i) முதலாம் உலகப் போரின் முடிவில் ஜேர்மனியுடன் ஏற்படுத்திய சமாதான உடன்படிக்கையின் பெயரைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

   (ii) முதலாம் உலகப் போரின் பின் இத்தாலியிலும் ஜேர்மனியிலும் எழுச்சி பெற்ற சர்வாதிகார ஆட்சிகள் **இரண்டினதும்** பெயர்களைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*

   (iii) அந்த ஆட்சிகளின் பிரதான தலைவர்கள் **இருவரின்** பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*

   (iv) இரண்டாம் உலகப் போரிற்கு அடிப்படையான நீண்டகால தொடர்புடைய காரணங்களைக் கருத்திற்கொண்டு மேற்குறித்த கூற்றினை ஆராய்க. *(09 புள்ளிகள்)*

8. மேலே குறிப்பிடப்படும் தலைவர்கள் **இருவரின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறு குறிப்புகள் எழுதுக.

   (i) ஆபிரகாம் லிங்கன்

   (ii) V. I. லெனின்

   (iii) ஹோச்சிமின்

   (iv) மாச்சேதுங்

   (v) துங்கு அப்துல் ரஹ்மன் *(ஒரு சிறு குறிப்புக்கு 07 புள்ளிகள்)*

9. **(A)** பகுதிக்கு **அல்லது (B)** பகுதிக்கு விடை எழுதுக.

   (A) "சோவியத் ரஷ்யா ஒரு வல்லரசாக எழுச்சி பெறுவதற்கு ஸ்டாலின் அத்திபாரம் இட்டான்". ஆராய்க. *(14 புள்ளிகள்)*

   **அல்லது**

   (B) (i) ஐக்கிய நாடுகள் சபையின் குறிக்கோள்களைக் குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

   (ii) 1960 வரை எந்தளவிற்கு அதனால் உலக சமாதானத்தைப் பேணிக்கொள்ள முடிந்தது என்பதைப் பரிசீலனை செய்க. *(09 புள்ளிகள்)*

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2013 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2013 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2013

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II
வரலாறு II
History II

25-C T

ප්‍රශ්න අංකය
வினா இல.
Question No. } 01

විභාග අංකය
சுட்டெண்
Index No. } ..............................

0231

